[23rd September 1961

SRI N. K. PALANISAMI : The notification *re.* fixation of minimum wages for ginning workers has already been published in the Gazette. But so far it has not been implemented.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நான் விடையளித்தது பீடித் தொழிலாளர்களைப்பற்றியது.

DEPUTY SPEAKER : Evidently the hon. Member wanted to put supplementary question on Question No. 1756.

SRI V. K. KOTHANDARAMAN : இந்தச் சட்டத்திற்கு ஜீவநாடியாக இருப்பதே 2-ஜி. என்கிற பிரிவு தான். இதை அமல் நடத்தவேண்டும் என்று கேட்கும்போதெல்லாம் " It is under consideration " என்று சொல்லிக்கொண்டே இருக்கிறார்கள் இரண்டு வருட காலமாக. அதோடு மற்ற பிரிவுகளை எல்லாம் மாற்றி பலவிதத்தில் விதிவிலக்கு கொடுத்து நோட்டிஃபிகேஷன் வந்து கொண்டிருக்கிறது. ஆகவே இதில் முக்கியமாக இருக்கின்ற 2-ஜி. என்பதற்கு நொட்டிஃபிக்கேஷன் வெளியிட இன்னும் எவ்வளவு காலமாகும் என்பதை திட்டவட்டமாக அமைச்சர் அவர்கள் தெரிவிப்பார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இந்தச் சட்டத்தில் இருக்கின்ற 2-ஜி. என்பது அரசியல் அமைப்புக்கு விரோதமாக இருக்கிறது என்று கோர்ட்டார் தீர்ப்பு கூறியிருக்கிறார்கள். அதை சமாளிப்பதற்கு வேறு நடவடிக்கைகள் எடுக்கவேண்டும். அவசரப்பட்டு நோட்டிஃபிக்கேஷன் கொண்டுவந்தால் இன்னொரு கோர்ட் இம்மாதிரி ஏதாவது தீர்ப்பை அளிக்கக்கூடும். ஆகவே இதையெல்லாம் பரிசீலனை செய்துதான் இதன் பேரில் முடிவு எடுக்க வேண்டும். லேபர் கமிஷனர் அவர்களும் லாடி பார்ட்மெண்டும் இதைப்பற்றி பரிசீலனை செய்து கொண்டிருக்கிறார்கள்.

*Ginning Factory Workers minimum wages*

*1756 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Home be pleased to state whether the ginning factory workers' representatives have submitted a memorandum on 10th March 1961 to implement the fixation of minimum wages?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : A petition, dated 9th January 1961 was received from the President, Coimbatore District General Workers' Union, Tiruppur, requesting that the minimum wages fixed for ginning workers might be enforced. But no complaints about non-payment of minimum wages have so far been received.

SRI N. K. PALANISAMI : Sir, I think the complaint is that the minimum wage has not been implemented so far. So, will the Government take steps to implement it?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I may tell the hon. Member that Inspectors have reported that they are keeping a watch and will take suitable action against defaulters if they do not comply with the provisions of the Act but no complaint regarding non-compliance has been received from the workers or their unions.

SRI N. MARUDACHALAM : ஜின்னிங் தொழிலாளர்களை சீசன் தொழிலாளர்கள் என்று சொல்லி பாக்டரி முதலாளிகள் சர்க்காரை ஏமாற்றி வருகிறார்கள். உண்மையில் இந்தத் தொழிலளர்கள் வருஷம் பூராவும் வேலை செய்து கொண்டிருக்கிறார்கள். இப்படி

23rd September 1961]

இருக்கின்றவர்களை சீசன் தொழிலாளர்கள் என்று வேலையிலிருந்து நீக்கிவிட்டு புதிதாக தொழிலாளர்களை எடுக்கிறார்கள். ஆகவே இவ்வாறு வருடம் பூராவும் வேலை செய்கின்ற தொழிலாளர்களை நிரந்தரமாக்கி அவர்களுக்கு சட்டப்படியுள்ள கூலியை நிர்ணயம் செய்ய உத்தேசம் உண்டா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இது வேறு பிரச்னை, இதற்கு தனியாக கேள்வி போட வேண்டும்.

*Factories—Proto—type*

*1757 Q—SRI S. M. ANNAMALAI : கனம் உள்துறை அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) நம் மாநிலத்தில் புரோடோடைப் தொழிற்சாலை ஏற்படுத்தும் உத்தேசம் உண்டா ?

(இ) அப்படியானால், எங்கெங்கே ஆரம்பிக்கப்படும் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) & (b) A proposal is reported to be under consideration of the Government of India.

SRI S. M. ANNAMALAI : இது தனியார் துறையில் ஆரம்பிக்கப் படுமா, அல்லது பொதுத் துறையில் ஆரம்பிக்கப்படுமா ? பொதுத் துறையில் என்றால், இதற்கு எவ்வளவு ரூபாய் செலவாகும், இதில் ஏற்படும் செலவை மத்திய சர்க்கார் ஏதேனும் ஏற்றிருக்கிறார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM ; இது பொதுத் துறையில் ஆரம்பிக்கப்படும். பிரஞ்சு அரசாங்கத்தின் ஒத்துழைப்போடு இது நிறை வேற்றப்படும்.

*Power-looms*

* 1758 Q.—SRI M. KALYANASUNDARAM : Will the Hon. the Minister for Electricity be pleased to state—

(a) whether power-looms are to be licensed in the State;

(b) if so, how many are to be permitted during 1961–62; and

(c) whether the Government have examined how far the introduction of power-looms would affect the hand-loom industry?

THE HON. SRI V. RAMAIAH : (a) & (b) It is proposed to introduce 2,500 power-loom in weavers' co-operative societies during the Third Five-Year Plan period. The number of power-looms to be installed during 1961–62 has not yet been decided; and

(c) Yes, Sir.

SRI M. KALYANASUNDARAM : கனம் அமைச்சர் அவர்கள் மூன்றாவது உப கேள்விக்கு சொன்ன பதிலில் ஆம் என்று சொன்னார் கள். இந்த விசைத்தறிகளை நம்முடைய ராஜ்யத்தில் அதிகமாக அனு மதிப்பதினால் ஏற்கனவே இருக்கக் கூடிய கைத்தறிகளுக்கு பாதகம் ஏற்படும் என்பதை அமைச்சர் அவர்கள் உணருகிறார்களா ?

THR HON. SRI V. RAMAIAH : இது ஒரு நீண்டகால பிரச்னை. இதைப்பற்றி ராஜ்யத்திலுள்ள எல்லா ஸ்தாபனங்களிடமும் கலந்து ஆலோசித்து பரிசீலனை செய்து, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலத் தில் 2,500 விசைத்தறிகளுக்கு அனுமதி கொடுப்பது என்று முடிவு செய்யப்பட்டிருக்கிறது.